Regd : No TN-MS C/ 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G 6-TN MS C P. P 55

**நம்பிக்கை**

நம்பிக்கை என்பது, மெல்லிய மலரல்ல; இமயம் போன்ற உறுதி வாய்ந்தது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**திருப்தி**

மக்களுக்கு சாந்தியும் திருப்தியும் ஏற்படும் ஆட்சி பொதுவுடைமை ஆட்சியே.

-தந்தை பெரியார்

மலர்: 8 சென்னை 23-9-1984 ஞாயிறு ⁂ வெளியூர் 24-9-1984 திங்கள் இதழ் 337

## புரட்சித்தலைவருக்கு மத்திய அமைச்சர் நன்றி - பாராட்டு

### "மத்திய அரசின் திட்டங்களை செயல்படுத்த ஒத்துழைப்பு தருகிறார்"

கும்பகோணம், செப். 23- மத்திய அரசின் திட்டங்களை செயல் படுத்துவதில் ஒத்துழைப்பு தருவதற்காக முதல்வர் புரட்சித் தலைவருக்கு மத்திய அமைச்சர் நன்றி தெரிவித்தார்.

கும்பகோணத்தில் தொலைக்காட்சி அஞ்சல் நிலையம் தொடக்கவிழா நடந்தது. இந்த விழாவுக்கு அமைச்சர் ஆர்.எம்.வீ. தலைமை வகித்தார்.

தொலைக்காட்சி அஞ்சல் நிலையத்தை தொடங்கி வைத்து மத்திய வெளியுறவுத்துறை துணை அமைச்சர் ஏ.ஏ. ரகீம் பேசினார். அப்போது அவர் கூறியதாவது:-

கும்பகோணத்தில் அமைக்கப்பட்டுள்ள தொலைக் காட்சி அஞ்சல் நிலையம் நாட்டில் 136வது அஞ்சல் நிலையமாகும் ஆனால் தமிழ்நாட்டில் இது 5 வது நிலையம் ஆகும்

செய்தி மற்றும் விளம்பர திட்டங்களை முன்னுரிமைத்துறையில் சேர்க்க வேண்டும் என்று தமிழக செய்தித்துறை அமைச்சர் குறிப்பிட்டார் இது பற்றி மத்திய அரசிடம் தெரிவிப்பேன்.

மத்திய அரசின் திட்டங்களை செயல் படுத்துவதில் தமிழக முதல்வர் ஒத்துழைப்பு தருகிறார் அதற்காக அவருக்கு எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு மத்திய அமைச்சர் ஏ.ஏ. ரகீம் கூறினார்.

### ஆர். எம். வீ. கோரிக்கை

விழாவுக்கு தலைமை வகித்து பேசிய தமிழக செய்தித் துறை அமைச்சர் ஆர்.எம்.வீ கூறியதாவது:-

மக்களின் தேவையை கருத்தில் கொண்டு செய்திமற்றும் விளம்பரம தொடர்பான அனைத்து திட்டங்களையும் முன்னுரிமைத் துறையில் சேர்க்க வேண்டும

அதிக ஒளிபரப்பு சக்தி கொண்ட கொடைக்கானல் தொலைக் காட்சி மையத்தை இந்த ஆண்டுக்குள் முடிக்க வேண்டும் அதனால் தொலைக் காட்சி நிகழ்ச்சிகளை காண முடியாத தஞ்சை மற்றும் அதனருகில் உள்ள பகுதிகள் போன்ற இடங்களுக்குப் பயனுள்ளதாக இருக்கும.

சென்னை நிகழ்ச்சிகளை அஞ்சல் செய்ய வசதியாக தொலைகாட்சி அஞ்சல மையங்களை நுண்ணலை கோபுரங்கள் மூலம் இணைப்பது குறித்து பரிசீலிக்க வேண்டும்.

கிராமப்புறங்களில 5 ஆயிரம் தொலைக் காட்சி செட்டுகளை அளிக்கும் திட்டம் பற்றி அரசு பரிசீலித்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

முன்னதாக சென்னை தொலைக்காட்சி மைய இயக்குனர் (பொறியியல்) ஜி நாகநாதன் வரவேற்று பேசினார்.

### கள்ளப்பூனை காணும் கனவு!

## ஐதராபாத்தில் வன்முறை தொடர்கிறது

### மேலும் ஒரு முதியவர் கத்தியால் குத்திக் கொலை

ஐதராபாத், செப். 23- ஐதராபாத்தில் வன்முறை தொடர்கிறது இன்று காலை முதியவர் ஒருவர் கத்தியால் குத்திக் கொல்லப் பட்டார்.

கடந்த 9-ம் தேதியிலிருந்து ஐதராபாத்தில் பழைய நகர்ப் பகுதியில் வகுப்புக் கலவரம் நடந்து வருகிறது. இதையொட்டி அப்பகுதியில் ஊரடங்கு உத்தரவு அமுலில் உள்ளது பாதுகாப்புப் பணியில் ராணுவமும் ஈடுபடுத்தப் பட்டுள்ளது.

எனினும் வன்முறைச் சம்பவங்கள் ஆங்காங்கே நடந்து கொண்டு தான் இருக்கின்றன. இந்த வன்முறைக்கு நேற்று முன் தினம் வரை 26 பேர் பலியாகி இருக்கிறார்கள்.

மங்களஹத் போலீஸ் நிலைய எல்லைக்கு உட்பட்ட தூல்பேட் பகுதியில் இன்று காலை 55 வயது மதிக்கத் தக்க ஒருவர் கத்தியால் குத்திக் கொல்லப் பட்டார்.

இவருடன் சேர்ந்து வகுப்புக் கலவரத்தில் இறந்தவர்களின் எண்ணிக்கை 27 ஆக உயர்ந்துள்ளது.

எனினும் பழைய நகர் முழுவதும் இன்று காலை 8 மணியிலிருந்து மாலை 6 மணிவரை ஊரடங்கு உத்தரவு தளர்த்தப்பட்டுள்ளது.

முன்னதாக இப்பகுதியில் சட்ட ஒழுங்கு நிலை குறித்து ஆந்திர முதல்வர் என். டி. ராமராவ் உள்துறைஅமைச்சர் ஹரிராம ஜோகையா, போலீஸ் டைரக்டர் ஜெனரல் மகேந்தர்ரெட்டி, நகர போலீஸ் கமிஷனர் பிரபாகரராவ் மற்றும் உயர் அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினார்,

## புரட்சிதலைவர் எச்சரிக்கை எதிரொலி:

# இலங்கை அலறல்

## வெளிநாட்டிடம் ராணுவ உதவி பெறவில்லை என்று ஓலம்

கொழும்பு, செப். 23- தமிழர்களைக் கொன்று குவிக்கும் இலங்கை அரசுக்கு முதல்வர் புரட்சித் தலைவா விடுத்த எச்சரிக்கை, இலங்கையை கதிகலங்க வைத்திருக்கிறது, வெளிநாட்டிடம்உதவி பெறவேஇல்லை என்று இலங்கை அரசுஓலமிட்டுள்ளது.

இஸ்ரேலிய உளவுப் படையான "மொஸாத்" உதவியுடன் இலங்கை ராணுவம் ஆயுதப் பயிற்சி பெற்று வருகிறது என்றும் தமிழர்களுக்கு எதிராக வெளிநாட்டு ஆயுதங்கள பயன்படுத்தப்பட்டு வருகிறது என்றும் நீண்ட நாட்களாக இலங்கைத் தமிழர் தலைவர்களும் தமிழக அரசியல் கட்சித் தலைவர்களும் குற்றம் சாட்டி வருகிறார்கள்,

இலங்கையின் வடக்குப் பகுதியில் தமிழர்கள் வாழும் ஊர்களை இலங்கை ராணுவம் தரைமட்டமாக்கிய போது வெளிநாட்டு ஆயுதங்களை இலங்கை ராணுவம் பயன்படுத்தியதாக ஏற்கெனவே செய்தி வந்தது.

இலங்கையின் கிழக்குப் பகுதியில் மொஸாத் உதவியுடன் இலங்கை ராணுவம் பயிற்சி பெற்று வந்தது என்றும் செய்தி வந்தது.

இலங்கை அரசு இத்தனை நாட்களாகஇந்தப் புகார் குறித்து மவுனம் சாதித்து வந்தது.

தஞ்சையில் ராஜராஜன் விழாவில்முதல்வர் புரட்சித் தலைவர் பேசும் போது,

"ஜெயவர்த்தனே செலலும் பாதை ஆபத்தானது இஸ்ரேலுடனும், பிரிட்டிசுடனும் அவர் தொடர்பு கொண்டு இருக்கிறார். இலங்கையின் ஐந்தாம் படையால் இங்குள்ளவர்களுக்கு ஆபத்து ஏற்பட்டால அடுத்த 24 மணி நேரத்தில அதன் பலனை ஜெயவர்த்தனே அனுபவிப்பார்"

என்று முதல்வர் புரட்சித் தலைவர் எச்சரித்திருந்தார்.

புரட்சித் தலைவரின் எச்சரிக்கை இலங்கையை அலறவைத்துள்ளது.

வெளிநாட்டு உதவி பெறுவது பற்றிய குற்றச்சாட்டுக்கு இத்தனை நாள் பதிலளிக்காதிருந்த இலங்கை இப்போது பதில் அளித்துள்ளது.

"எந்த வெளிநாட்டிலிருந்தும் நாங்கள் உதவி பெறவே இல்லை" என்று இலங்கை பாதுகாப்பு மந்திரி அதுலத் முதலி அலறி இருக்கிறார்.

"வெளிநாட்டு ராணுவ பயிற்சியையோ வெளிநாட்டு தளவாடங்களையோ இலங்கை ராணுவம் பெறவே இல்லை" என்று அதுலத் முதலி கூறி இருக்கிறார்,

இலங்கை தமிழர்கள்

1-ம் பத்தி பார்க்க

8-ம் பத்தி தொடர்ச்சி

வாழும் பகுதியை அழிக்க இலங்கை ராணுவம் பயன்படுத்தியது வெளிநாட்டு ஆயுதங்கள் என்பது தெரிந்தது.

இலங்கை தமிழர்களுக்கு எதிராக இலங்கை ராணுவம் போர் நடத்திய போது இலங்கைக்கு ஆதரவாக இங்கிலாந்து போர்க் கப்பல் கொழும்பு துறைமுகத்தில நிறுத்தபட்டிருந்ததும் நினைவிருக்கலாம்.

## கழக தலைமை நிலையத்தில் அமைச்சர் வீராசாமி

சென்னை, செப். 23— அமைச்சர் வீராசாமி தலைமைக் கழகத்தில் பொதுச் செயலாளர் ப. உ. ச., அமைப்புச் செயலாளர் திருமதி சத்தியவாணிமுத்து, பொருளாளர் எஸ். மாதவன். தொழிலாளர் அணி செயலாளர் க. சுப்பு தொழிற் சங்க பேரவை பொதுச் செயலாளர் வை. பெருமாள், ஆகியோர்களை சந்தித்து மாலைகள் மற்றும் கைத்தறி ஆடைகள் அணிவித்து வாழ்த்து பெற்றார்.

அவ்வமயம், கீழ்த் தஞ்சை மாவட்ட இளைஞா அணி செயலாளர் ஞானசுந்தரம், நீடாமங்கலம் ஒன்றிய செயலாளர் முல்லை மூர்த்தி தஞ்சை நகர மாவட்ட பிரதிநிதி தம்பி மோகன் கீவலூர் ஒன்றிய செயலாளர் பாண்டியன் தஞ்சாவூர் எம்.ஜி.ஆர். மன்ற செயலாளர் எம்.எம்.இப்ராகிம் மற்றும் பலர் உடனிருந்தார்கள்.

## எல்லைப் பிரச்சினை: இந்திய-சீன பேச்சு வார்த்தை

பெய்ஜிங், செப். 23- இந்தியாவுக்கும சீனாவுக்கும் இடையேயான எல்லைப் பிரச்னையை தீர்த்துக் கொள்வதற்கான 5-வது சுற்று பேச்சு வார்த்தை நடைபெற்றது இந்த பேச்சுவார்த்தையில இந்திய-சீன உயர் அதிகாரிகள் கலந்து கொண்டனர்,

இந்த பேச்சு வார்த்தையில் முன்னேற்றம் காணப்பட்டதாக அதிகாரி ஒருவா கூறினார். 6-வது சுற்றுப் பேச்சு வார்த்தை நடைபெறும் என்று குறிப்பிட்ட அதிகாரி அதற்கான இடம் பின்னர் முடிவு செய்யப்படும் எனவும கூறினார்.

## பொள்ளாச்சியில் காந்தி சிலை திறப்பு விழா

கோவை, செப். 23— பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம் சார்பில் மகாத்மா காந்தியின் உருவச் சிலை திறப்புவிழா வரும் அக்டோபர் 2ம்தேதி மாலை 4 மணிக்கு நடைபெற விருக்கிறது.

விழாவுக்கு தி. சு. அவிநாசிலிங்கம் தலைமை வகிக்கிறார்.

### அண்ணா பவள விழா பேரணி

# பிரமாண்ட ஏற்பாடு

### சாதனை விளக்க படங்கள் வீர விளையாட்டு போட்டிகள்

சென்னை செப். 23- வரும் 30ந்தேதி நடைபெறும் பேரறிஞர் அண்ணா பவளவிழாப் பேரணியை முன்னிட்டு சென்னை மாவட்ட கழகம் பிரமாண்டமான ஏற்பாடுகளைச் செய்துள்ளது.

சைதாப்பேட்டை மறைமலை அடிகள் பாலத்திலிருந்து செப்டம்பர் 30ந்தேதி பகல் 2-மணிக்கு அண்ணா பவளவிழா பேரணி தொடங்குகிறது.

பண்டைத் தமிழகத்தின் வீர விளையாட்டுக்களை இந்தப் பேரணியில் செய்து காட்ட, சென்னை மாவட்ட கழகம் ஏற்பாடு செய்துள்ளது. சிலம்பாட்டம், ஒயிலாட்டம், சடுகுடு மயிலாட்டம், போன்ற பலவேறு சிறப்பு அம்சங்கள் பேரணியில இடம் பெறும்.

முதல்வர் புரட்சித் தலைவர் பேரணிக்கு தலைமை தாங்குகிறார்

பவளவிழாப்பேரணியையொட்டி விளையாட்டுப் போட்டிகள் நடைபெறுகின்றன.

சென்னை நகரின் 14 தொகுதிகளைச் சேர்ந்த கழக நிர்வாகிகள் இந்த போட்டிகளுக்கு ஏற்பாடு செய்துள்ளனர் நீச்சல் போட்டி-சடுகுடு போட்டி-குத்துச் சண்டை போட்டி முதலியவை நகரின் பல்வேறு பகுதிகளில் நடந்துவருகின்றன மகளிர் அணியின

(2-ம் பக்கம் பார்க்க)

# நீதிக்குதலைவணங்கும் புரட்சித்தலைவர்ஆட்சி

## அமைச்சர் பொன்னையன் பெருமிதம்

சென்னை, செப். 23- நீதிக்குத் தலை வணங்கும் கழக ஆட்சி நீதிமன்றங்கள் வழங்கும் தீர்ப்புகளை போற்றி மதித்து வருகிறது என்று அமைச்சர் பொன்னையன் பெருமிதத்துடன் கூறினார்.

செங்கல்பட்டு மாவட்டம் பூந்தமல்லியில் சப் கோர்ட் திறப்புவிழா நடைபெற்றது. சென்னை உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி எம்.என். சந்தூர்க்கார் சப்-கோர்ட் கட்டிடத்தை திறந்து வைத்தார்.

திறப்புவிழாவில் கலந்து கொண்டு பேசிய தொழில் மற்றும் சட்ட அமைச்சர் பொன்னையன் கூறியதாவது:

தமிழகத்தில் நீதிமன்றங்கள் வசதியாக இயங்க அதிக நிதி ஒதுக்க வேண்டும் என்று கழக அரசு மத்திய அரசை கேட்டுக் கொண்டுள்ளது.

நீதிபதிகள் வசதியாக இருக்கவும் நீதிமன்ற கட்டிடங்கள் நல்லமுறையில் இருக்கவும் அரசு ஆவன செய்து வருகிறது.

நீதிக்கு தலை வணங்குவதில் கழக அரசு முன்னிலையில் இருக்கிறது நீதிமன்ற தீர்ப்புகளை தமிழக அரசு போற்றி மதித்து வருகிறது நீதிமன்றங்கள சுதந்திரமாக இயங்குவதில் தமிழக அரசு தீவிரமாக இருந்து வருகிறது.

தமிழகத்தில் உள்ள நீதிமன்ற கட்டிடங்களை பராமரித்து புதுப்பிக்க ரூ 155 கோடி தேவைப்படும் என்று மதிப்பிடப் பட்டுள்ளது.

### தேங்கிகிடக்கும் வழக்குகள்

கோர்ட்டுகளில் வழக்குகள் தேங்கிக் கிடக்காமல் அவ்வப்போது பைசல் ஆவதற்கான அனைத்து நடவடிக்கையையும் அரசு எடுத்து வருகிறது.

ஏழை எளியவர்களுக்கு சட்ட உதவி அளிப்பதிலும் புரட்சித்தலைவர் அரசு கண்ணும் கருத்துமாக இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

தலைமை நீதிபதி சந்தூர்க்கார் பேசுகையில் கூறியதாவது:-

கோர்ட்டுகளில் வழக்குகள் தேங்கிக் கிடப்பது கடந்த 25 ஆண்டுகளாகவே இருந்து வருகிறது.

### வாய்தா கூடாது

சட்டங்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்துவதினாலேயே வழக்குகள் விரைவில் தீர்ந்துவிடும் என்று சொல்வதற்கு இல்லை

வழக்குகள் விரைவில் பைசல் ஆவதற்கு நீதிபதிகளும் வழக்குரைஞர்களும் ஒத்துழைப்பு தரவேண்டும். வழக்குகள் நடக்கும் போது வாய்தா வாங்குவதை வழக்குரைஞர்கள் அறவே தவிர்க்க வேண்டும். நீதிபதிகளும் தங்களது பொறுப்பை உணர்ந்து செயல்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு தலைமை நீதிபதி சந்தூர்க்கார் கூறினார்.

பூந்தமல்லி வழக்கறிஞர்கள் சங்கத்தலைவர் ஆர். பழனியப்பன் வரவேற்றார் கழக எம். எல். ஏ. ஜெ.சி.டி. பிரபாகரன் இந்திராகாங்கிரஸ் எம். பி. அன்பரசு, ராஜரத்தனம் எம். எல். ஏ. ஆகியோரும் கழக ஆட்சியை பாராட்டிப் பேசினார்கள்.

பூந்தமல்லியில்புதிய சப் கோர்ட் திறக்கப்பட்டதற்கு அவர்கள் நன்றி தெரிவிததனர்.

---

என். டி, ராமாராவ் அமைச்சரவையில் சேர

# பாரதீய ஜனதா கட்சி மறுப்பு

ஐதராபாத், செப். 23. என். டி ராமாராவ் அமைச்சரவையில் சேர பாரதிய ஜனதா கட்சியும் மறுத்து விட்டது.

ஐதராபாத் நகரில்நடந்த பொதுக் கூட்டம் ஒன்றில் ஆந்திர முதல்வர் என் டி. ராமராவ் பேசுகையில் இந்திய கம்யூனிஸ்டு, மார்க்சிய கம்யூனிஸ்டு, ஜனதா, பாரதிய ஜனதா ஆகிய தேசிய கட்சிகள் எனது அமைச்சரவையில் சேரவேண்டும் என்று அழைப்பு விடுத்தார்.

இந்த அழைப்பை ஏற்கனவே இந்திய கம்யூனிஸ்டு, மார்க்சிய கம்யூனிஸ்டு, ஜனதா ஆகிய கட்சிகள் நிராகரித்து விட்டன. இப்போது பாரதிய ஜனதா கட்சியும் நிராகரித்து விட்டது. கட்சி பொதுச்செயலாளர் எல்.

1-ம் பத்தி பார்க்க

3ம் பத்தி தொடர்ச்சி

கே. அத்வானி தொலைபேசி மூலம் இந்த முடிவை தெரிவித்ததாக ஆந்திர மாநில சட்டமன்ற பாரதிய ஜனதா கட்சித் தலைவர் எம். வெங்கையா நாயுடு நிருபர்களிடம் தெரிவித்தார்.

---

# ஏறு நடைபோடும்! திருச்சி மாவட்ட மாணவர் அணி

திருச்சி. செப். 23- திருச்சி சட்டக்கல்லூரி அனைத்திந்திய அண்ணா திமுகழகமாணவர் அமைப்பு கலைக்கப்பட்டதாக பொய்யான செய்தியை வெளியிட்ட ஒரு ஏட்டிற்கு மாவட்ட துணைச்செயலாளர் எஸ். புருசோத்தமன் கண்டனம் தெரிவித்துள்ளார்.

இதுகுறித்து அவர் கூறியிருப்பதாவது:

திருச்சி மாவட்டத்தில் உள்ள அனைத்துக் கல்லூரிகளிலும் கழக மாணவர் அமைப்பு சிறப்பான முறையில் செயல்பட்டு வருகின்றது.

இங்குள்ள அனைத்துக் கல்லூரிகளிலும் மாணவர்கள் புரட்சித்தலைவரின் தலைமையின் கீழ் செயல்பட்டு வருகிறார்கள்.

நடந்து முடிந்த கல்லூரி தேர்தல்களில கழக மாணவர்களே தலைவர்களாக தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

திருச்சி ஜமால் முகமது கல்லூரி மாணவர் தலைவராக சிவராஜும், அரியலூர் அரசு கலைக் கல்லூரி மாணவர் தலைவராக ஜபருல்லாவும கரூர் அரசு கலைக்கல்லூரி மாணவர் தலைவராக பாலசந்திரனும் செயலாளராக செல்லப்பனும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

ஒரு செய்தித் தாளில் திருச்சி சட்டக் கல்லூரி கழக மாணவர் அமைப்பு கலைக்கப்பட்டதாக பொய்யான செய்தி வெளியிட்டுள்ளனர். இது உண்மைக்குப் புறம்பானதாகும்.

திருச்சி சட்டக் கல்லூரியிலும் மற்றும் இம் மாவட்டத்திலுள்ள அனைத்துக் கல்லூரிகளிலும் அனைத்திந்திய அண்ணா திராவட மாணவர் முன்னேற்றக் கழக அமைப்புகள் நன்கு செயல்பட்டு வருகின்றன.

இவ்வாறு மாவட்ட துணைச் செயலாளர்எஸ், புருசோத்தமன், மாவட்ட துணை அமைப்பாளர் மா வீராசாமி ஆகியோர் தெரிவித்துள்ளனர்.

---

# பேறிஞர் அண்ணா பவளவிழா பேரணி

வரும் 27-ந் தேதி (வியாழக்கிழமை) காலை 10 மணிக்கு சைதை மறைமலை அடிகள் பாலம் அருகில் மோட்டார் சைக்கிள் பேரணியில் கலந்து கொள்ள பெயர் கொடுத்துள்ளவர்கள், மோட்டார் சைக்கிள்களோடு வந்து சேருமாறு கேட்டுக் கொள்கிறோம்.

ஜேப்பியார், எம்.எல்.சி.
சென்னை மாவட்ட கழகச் செயலாளர்

---

தேசிய ஜவுளி கார்ப்பரேஷன்

# துணி கடைகளில் பணிபுரிவோருக்கு ஊதிய உயர்வு

## அரசு பேச்சுவார்த்தை வெற்றி

சென்னை, செப். 23- தேசிய ஜவுளி கார்ப்பரேஷன் நிர்வாகத்தினர் மற்றும்தொழிற் சங்கத்தலைவர்கள் ஆகியோருடன் தொழிலாளர நலத் துறை அதிகாரி நடத்திய பேச்சுவார்த்தை நல்ல வெற்றியை அளித்துள்ளது வேலை நிறுத்தம் செய்து வந்த தொழிலாளர்கள் வரும் 26 ம் தேதி முதல் வேலைக்குத் திரும்புகிறார்கள்

தேசிய ஜவுளி கார்ப்பரேஷன் தமிழ்நாடு, பாண்டிச்சேரி மாநிலங்களில் 88 விற்பனை காட்சிக் கூடங்களை நடத்தி வருகிறது. இந்த காட்சிக்கூடங்களில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள தங்களது கோரிக்கைகளை வலியுறுத்தி கடந்த 5 ம் தேதி முதல் வேலை நிறுத்தம் செய்து வந்தார்கள அகவிலைப்படி. வீட்டு வாடகைப்படி நகர ஈட்டுப்படி ஆகியவை சம்பந்தமான கோரிக்கைகளை அவர்கள்விடுத்திருந்தனர்

தொழிலாளர் களுக்கும் நிர்வாகத்தினருக்கும் இடையே சமரசம் ஏற்படுத்துவதில் தொழிலாளா நலத்துறையினா ஈடுபட்டனா.

தொழிலாளர் நலத்துறை இணை கமிஷனர் (நிர்வாகம்) எம்.எப். எக்ஸ். பெல்லார்மின் தேசிய ஜவுளி கார்ப்பரேஷன் நிர்வாகிகள் தொழிற்சங்கத் தலைவர்கள் ஆகியோர்களுடன் கடந்த 22- ம்தேதி பேச்சுவார்த்தை நடத்தினர்.

அதைத் தொடர்ந்து இருசாராருக்கும் இடையே இணை இயக்குனர் முன்பு ஒப்பந்தம் ஏற்பட்டது.

ஒப்பந்தத்தை ஏற்று தொழிலாளர்கள் தங்களது வேலைநிறுத்தத்தைவரும் 26 ம். தேதிக்கு முன்ன தாகவேவிலக்கிக்கொள்ள சம்மதித்துள்ளனர்.

சலுகை அடிப்படையில் தொழிலாளர்கள் துணி வாங்கிக்கொள்ளும் அளவும் உயர்த்தப் பட்டுள்ளது. தவிர மாத ஊதியம் ரூ. 75 அதிகம் கிடைக்கும் சுமார் 500 தொழிலாளர்கள் இதன்மூலம் பயன் பெறுவார்கள்.

இந்த ஒப்பந்தம் வரும் 2 ஆண்டுகளுக்கு அமுலில் இருக்கும் என்று தெரிவிக்கப் பட்டுள்ளது.

---

# திருச்சியில் மேலும் ஒரு பாலிடெக்னிக்

சென்னை, செப். 23- 24 மனை தெலுங்கு செட்டியார் சங்கபொதுக் குழு கூட்டம் இன்றுசென்னையில் உள்ள ராஜேசுவரி திருமண மண்டபத்தில் நடைபெறுகிறது கே. எஸ், முத்துக்காளி செட்டியார் தலைமை வகிக்கிறார்.

சங்கம் சார்பில் திருச்சியில் ஒரு புதிய பாலிடெக்னிக் துவங்கப்பட விருக்கிறது. அதற்காக 22 ஏக்கர் நிலம் வாங்கப்பட்டுள்ளது இந்த சமூகத்தினருக்கு அரசு பதவிகள் எம்.எல்.ஏ., எம்.எல்.சி. இடங்கள் ஒதுக்குவது 24 மனை தெலுங்கு செட்டியார் வகுப்பினரை மிகவும பின்தங்கிய பட்டியலில் சேர்ப்பது முதலிய கோரிக்கைகளை இவர்கள் வலியுறுத்தி வருகிறார்கள்.

இந்த சமூகத்தைச் சேர்ந்தவர்கள் சுமார் 35 லட்சம் பேர் தமிழகத்தில் இருப்பதாகவும் தங்களதுகோரிக்கைகள்பற்றி அரசியல் தலைவர்களிடம் எடுத்துக்கூற 17 பேர்கொண்ட கமிட்டி ஒன்று அமைப்பது முதலியவை இன்றைய கூட்டத்தில் தீர்மானிக்கப் படும் என்றும் முத்துக்காளி செட்டியார் கூறினார்.

பொதுச் செயலாளர் ஆர். பழனிச்சாமி, பொருளாளர் கரூர் கே. சி. பழனிச்சாமி தலைமை சங்க செயலாளர் வி. வி. ஆர். செல்வராஜ் ஆகியோர் இத்தகவல்களை தெரிவித்தனர்.

---

# ரோகிணி - ஜனசேவா லாட்டரி முடிவுகள்

## ரோகிணி

புதுடெல்லி செப் 23— ரோகிணி லாட்டரியின் 16-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
ஒய் ஒய் 205828

இதே எண்கள் உடைய மற்ற வரிசைசிட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 10 00 உண்டு.

2-வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
எக்ஸ் எக்ஸ் 387786
இசட் இசட் 224687

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும்பரிசு உண்டு

3-வது பரிசு
தலா ரூ. 500
38555 86585 99255
69636 90733 88014
45623 03541 87440
73324

4-வது பரிசு
(தலா ரூ 50)
5931 6285 5778 2325
3500 9384 8187 3307
1350 6083

5- வது பரிசு
தலா ரூ 20
009 140 286 302 462
506 620 793 834 923

6—வது பரிசு
(தலா ரூ 10)
082 142 264 391
453 508 691 791
899 967

## ஜனசேவா

ஜனசேவாலாட்டரியின் 49வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு—

முதல் பரிசு
(ரூ 1 லட்சம்)
ஆர் ஜே 739978

2- வது பரிசு
தலா ரூ.10 ஆயிரம்
கியூ ஜே 299693
ஆர் ஜே 641206
எஸ் ஜே 467653

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3- வது பரிசு
தலா ரூ. 500
29622 70595 12211
86059 12551 87190
39453 96644 21213
65671

4-வது பரிசு
தலா ரூ. 50
9913 5704 2560 3461
0682 8961 0239 3247
5646 0599

5-வது பரிசு
தலா ரூ. 20
4932 8517 0052 7201
7609 1579 2725 2584
0203 5431

6- வது பரிசு
தலா ரூ. 10
088 123 265 364 451
589 634 793 848 977

7- வது பரிசு
(தலா ரூ. 5)
050 101 225 367 478
505 670 781 830 921
034 126 243 310 405
510 678 720 804 948
083 127 220 345 438
557 671 730 833 935
054 170 272 344 430
540 605 789 899 949
059 118 259 355 428
500 658 792 810 930

---

# அண்ணா பவள விழா பேரணி- ஆலோசனை கூட்டம்

சென்னை மாவட்ட தொகுதி செயலாளர், வட்ட செயலாளர், எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகள், தொழிலாளர் அணி நிர்வாகிகள், இளைஞர் அணி நிர்வாகிகள், மாணவர் அணி நிர்வாகிகள், மகளிர் அணி நிர்வாகிகள், வழக்கறிஞர்கள் அடங்கிய ஆலோசனைக் கூட்டம் புதன்கிழமை (26ந் தேதி) மாலை 4 மணிக்கு தலைமைக் கழகத்தில் நடைபெறும். அனைவரும் கலந்து கொள்ள அன்புடன் வேண்டுகிறேன்.

ஜேப்பியார் எம். எல். சி.
சென்னை மாவட்ட கழகச் செயலாளர்

---

தெற்காசிய விளையாட்டு போட்டி

# இந்தியாவுக்கு 88 பதக்கங்கள்

## வீராங்கனை சைனிக்கு 2 தங்கப் பதக்கங்கள்

காட்மண்டு. செப். 23- தெற்காசிய விளையாட்டுப் போட்டியில் 88 பதக்கங்களை இந்தியா வென்று முதலிடத்தைப் பெற்றது.

நேப்பாள நாட்டு தலைநகரான காட்மாண்டுவில் தெற்காசிய விளையாட்டு போட்டி நடந்தது.

இப் போட்டிகளில் இந்தியாவுக்கு 44 தங்கப்பதக்கங்கள், 28 வெள்ளிப் பதக்கங்கள் 16 வெண்கலப்பதக்கங்கள் கிடைத்தன,

### இந்தியா முதலிடம்

மொத்தம் 88 பதக்கங்களைப்பெற்ற இந்தியா பதக்கப் பட்டியலில் முதலிடத்தைப் பெற்றுள்ளது.

400 மீட்டர் மகளிர் ரிலே ஓட்டப் பந்தய போட்டியில் சைனி ஆப்ரஹாமுக்கு தங்கப்பதக்கம்கிடைத்தது 400 மீட்டர் மகளிர்ஓட்டப் பந்தய போட்டியிலும், சைனி ஆப்ரஹாமுக்கு தங்கப்பதக்கம் கிடைத்தது.

### 5 தங்க பதக்கம்

400 மீட்டர் ஆண்கள் ஓட்டப்பந்தயபோட்டியில் இந்திய வீரர் ராஜேந்தருக்கு வெண்கலப்பதக்கம் கிடைத்தது

குத்துச் சண்டையில் இந்தியாவுக்கு 5 தங்கப் பதக்கங்கள், 4 வெள்ளி, மற்றும் 3 வெண்கலப் பதக்கங்கள் கிடைத்தன.

அத்தலடிக் பிரிவில் இந்தியாவுக்கு 10 தங்கம், 8 வெள்ளி, 6 வெண்கலப் பதக்கங்கள் கிடைத்தன

---

# சென்னை மாநகராட்சி கமிஷனராக ராமகிருஷ்ணன் நியமனம்

சென்னை, செப். 23— சென்னை மாநகராட்சி கமிஷனராக கோ. ராமகிருஷ்ணன் நியமிக்கப் பட்டுள்ளார்.

மாநகராட்சியில் ராமகிருஷ்ணன் இதுவரை டிப்டி கமிஷனராக பணியாற்றிவந்தார்.

இவரது நியமனத்திற்கு சென்னை மாநகராட்சி அலுவலர்கள் சங்கம் நன்றி தெரிவித்துக் கொண்டுள்ளது.

மாநகராட்சி அலுவலர் சங்க இணை செயலாளர் ந. பாலசுந்தரம் வெளியிட்டுள்ள அறிக்கையில் ராமகிருஷ்ணனுக்கு பாராட்டுத் தெரிவித்துள்ளார்.

---

# பிரமாண்ட ஏற்பாடு

1ம் பக்கத் தொடர்ச்சி

ருக்கும் தனியாக விளையாட்டுப் போட்டிகள் கோபாலபுரம் மாநகராட்சி விளையாட்டுத் திடலில் இன்று நடந்தது. வெற்றி பெற்றவர்களுக்கு பேரணி விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் பரிசளிக்கிறார் என்பதால் சழகத்தோழர்கள் "நான்-நீ" என்று போட்டிகளில் கலந்து கொள்கிறார்கள்.

கழக அரசின் சாதனைகளை விளக்கும் கட் அவுட் படங்கள் தயாராகி வருகின்றன.

பேரணியில் வரும் மோட்டார் சைக்கில் வீரர்களுக்கும், குதிரையில் வர இருக்கும் கழகச் செயல் வீரர்களுக்கும் சென்னை மாவட்ட கழக செயலாளர் ஜேப்பியார் எம்.எல்.சி. மேற்பார்வையில்பயிற்சி அளிக்கப்படுகிறது.

புரட்சித்தலைவர் பட்டாளத்தின் வரலாற்றுச் சிறப்புமிகு பேரணியாக அமைய விருக்கும் இந்நிகழ்ச்சிக்கான ஏற்பாடுகளில் கழகத்தின் அனைத்துப் பிரிவு நிர்வாகிகளும் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.

---

# ஆர். வி. சாமிநாதனுக்கு தொடர்ந்து சிகிச்சை

பம்பாய், செப். 23— முன்னாள் மத்திய அமைச்சர் ஆர். வி. சாமிநாதன் பம்பாய் ஓட்டலில் தங்கி இருந்த போது திடீரென்று மாரடைப்பு ஏற்பட்டு பம்பாய் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கிறார் அல்லவா? அவருக்கு அங்கு தொடர்ந்து சிகிச்சை அளிக்கப்பட்டு வருகிறது.

---

# இந்தியா-சீனா எல்லைபிரச்சினை: மைய அமைச்சர்சவான் எச்சரிக்கை

புதுடெல்லி, செப். 23- இந்திய எல்லைப்பகுதிகளை சீனா ஆக்கிரமித்துக் கொள்ள ஒருபோதும் விட்டுவிட மாட்டோம் என்று பாதுகாப்பு அமைச்சர் எஸ்.பி சவான் உறுதிபட கூறினார்.

இந்தியா — சீனா எல்லைத் தகராறு பற்றிய 5-வது சுற்று பேச்சுவார்த்தை நேற்று பெய்ஜிங்கில் முடிவடைந்தது தெரிந்ததே.

கர்நாடகமாநிலம்பைடரில் விமானப் படையினர் நடத்திய நிகழ்ச்சிஒன்றில் கலந்து கொள்ள இன்று புதுடெல்லியில் இருந்து பாதுகாப்பு அமைச்சா எஸ் பி. சவான் விமானம் மூலம் சென்றார்.

முன்னதாக அவர் நிருபர்களிடையே பேசுகையில் கூறியதாவது:-

கடந்த 962-ம் ஆண்டில இந்தியாவின் எல்லைப்பகுதியான 'ஆக்சாய்' சின் மற்றும் சில பகுதிகளை சீனா ஆக்ரமித்துக் கொண்டது அந்தப் பகுதிகளை இந்தியா ஒரு போதும் விட்டு விடாது

ஆக்சாய்சின் பகுதிஜம்மு காஷ்மீர் மாநிலத்தின்ஒரு பகுதியாகும் அதனை சொந்தம் கொண்டாட சீனாவுக்கு உரிமை இல்லை.

நடந்து முடிந்த எல்லைப்பிரச்சனை பற்றிய பேச்சுவார்த்தையிலும் இது குறித்து இந்தியா வலியுறுத்தியிருக்கிறது. உலக நாடுகளும் இதை ஒப்புக் கொண்டுள்ளன.

நவீன போர் ஆயுதங்கள் மற்றும் அணுகுண்டு விவரங்கள் ஆகியவை அமெரிக்காவும் பாகிஸ்தானும் பரிவர்த்தனை செய்துகொளவது கண்டிக்கத்தக்கது. பாகிஸ்தானுக்கு அமெரிக்கா நவீன யுத்தஆயுதங்களை சப்ளை செய்வதும் கண்டிக்கத்தக்கது.

அண்மையில் மலைஉச்சி எல்லைப் பகுதிகளில் பாகிஸ்தான் ராணுவத்தினர் நமதுப்படையினருடன் மோதியிருக்கிறார்கள் இந்த மோதலை அடிப்படையாக்கி அமெரிக்காவிடம் நவீன யுத்த தளவாடங்களை பெற பாகிஸ்தான் முயற்சிசெய்கிறது என்றே கருதுகிறேன்

இந்தியா தன்னுடைய பாதுகாப்பு நடவடிக்கைகளில் எப்போதும் உஷாராகவே இருந்துவருகிறது நாட்டைப் பாதுகாத்து கட்டிக்காப்பதில் நவீன ஆயுதங்களை மற்றும அதிவேக சாதனங்களை நாம் பெற ஆவன செய்வோம்.

இவ்வாறு பாதுகாப்பு அமைச்சர் எஸ்.பி.சவான் கூறினார்,

---

பொய்ச்செய்தி:

# கழகத் தோழர்கள் மறுப்பு

விராலிமலை, செப். 23—விராலிமலை கழக ஒன்றிய பிரதிநிதி எஸ். கே சண்முகம், ஒன்றிய செயலாளர் சண்முகம் மற்றும் கே. ஏ. ராமன், பழனிவேலு ஆகியோர் வெளியிட்டுள்ள அறிக்கையொன்றில் தாங்கள் கழகத்தை விட்டு விலகியதாக கருணாநிதி எடுபிடி ஏடுகளில் வெளி வந்துள்ள செய்தியை மறுத்துள்ளனர்,

வேண்டுமென்றே பொய்செய்தி வெளியிடும் பத்திரிகைகளை அவர்கள் கண்டித்துள்ளனர்,

போக்குவரத்துத்துறை

## ஆணையர் காசிராஜன் மகள் திருமண வரவேற்பு

சென்னை, செப். 23— தமிழக அரசு போக்குவரத்துத்துறை கமிஷனரும், பச்சையப்பா அறக்கட்டளை தலைவருமான எஸ்.டி.காசிராஜன் மகள் டாக்டர் சாந்திக்கும், டாக்டர் ஆ. குணசிங்குக்கும் நடைபெற்ற திருமண வரவேற்பு விழா கடந்த 21ம் தேதி சென்னை ஹேமமாலினி திருமண மண்டபத்தில் நடைபெற்றது.

சட்டப் பேரவைத் தலைவர் ராஜாராம், மேலவைத் தலைவர் ம. பொ. சி., தமிழக அமைச்சர்கள், முன்னாள் முதலமைச்சர் பக்தவத்சலம், தலைமைச் செயலாளர் கே.சொக்கலிங்கம் காவல் துறை டைரக்டர் ஜெனரல் ராதாகிருஷ்ணன், சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிகள் மற்றும் அரசு அதிகாரிகள், உறவினர் பலரும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

## பெண்ணைக் கற்பழிக்க முயன்ற மந்திரி கைது

கோஹிமா, செப். 23- குடிபோதையில் இளம் பெண்ணைக் கற்பழிக்க துரத்திச் சென்று துப்பாக்கியால் சுட்டு காயப்படுத்தியதாக நாகாலாந்து அமைச்சர் ஒருவர் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டார்.

இது பற்றி போலீஸ் தரப்பில் கூறப்படுவதாவது:-

சம்பவதினத்தன்று சினிமா பார்த்து விட்டு இரவு 11-30 மணியளவில் 5 இளைஞர்களும் 3 இளம் பெண்களும் வீட்டுக்கு திரும்பிக் கொண்டிருந்தனர்.

அப்போது நாகாலாந்து சிறை மற்றும் மின்துறை துணை அமைச்சர் யோகடன் கோன்யாக மற்றும் 3 பேர், பெண்களில் ஒருத்தியைக் கற்பழிக்க முயன்றதாக கூறப்படுகிறது. ஆயினும் பெண்கள் தப்பிச் சென்றனர்.

தப்பிச் சென்றவர்களை அமைச்சர் யோக்டன் கோன்யாக் துரத்திச் சென்று கைத்துப்பாக்கியால் சுட்டதாகக் கூறப்படுகிறது.

குண்டு காயத்துடன் இளம்பெண்களில் ஒருத்தி ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டாள். அங்கு டாக்டர்கள் அறுவை சிகிச்சை மூலம் குண்டை அப்புறப்படுத்தினர்.

திமாபூர் ஆஸ்பத்திரியில் அமைச்சர் யோகடன் கோன்யாக்கை டாக்டர்கள் பரிசோதித்ததில் அவர் குடிபோதையில் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

கொலைசெய்ய முயன்றதாக அவர் மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டார்.

இச்சம்பவத்தை அடுத்து அமைச்சர் பதவியை யோக்டன் கோன்யாக் ராஜினாமா செய்துவிட்டதாக முதல்வர் எஸ். சி. ஜமீர் ஓர் அறிக்கையில் தெரிவித்துள்ளார். அவருடைய ராஜினாமாவை ஏற்றுக் கொள்ளுமாறு கவர்னருக்கும் சிபாரிசு செய்யப்பட்டுள்ளது என்றும் அவர் கூறினார்.

கழகத் தோழர் மீது திமுக தாக்கு

## அமைச்சர் அண்டே ஆறுதல்

சென்னை, செப். 23— வில்லிவாக்கம் தொகுதி, ஓரகடம் மற்றும் சாந்தி வள்ளுவர்நகர் கழகவட்ட செயலாளர் வாசு தி.மு.க. வினரால் கடந்த 21ம் தேதி அன்று தாக்கப்பட்டார். வாசுவின் கை-கால்கள் வெட்டப்பட்டு தலையில் காயப்படுத்தப்பட்ட நிலையில் அவர் ஸ்டான்லி மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார்.

மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டுள்ள வாசுவை அமைச்சர், அண்டே, ஜே.சி.டி. பிரபாகரன் எம்எல்ஏ, குடிசை மாற்று வாரிய தலைவர் என். வி. என். செல்வம் ஆகியோர் சென்று பார்த்து ஆறுதல் கூறினர்.

## பின்னி ஆலையை திறக்க கழக அரசு தீவிர ஏற்பாடு

சென்னை, செப். 23— பி. அண்ட் சி. ஆலையை திறக்க கழக அரசு பெரும் முயற்சி எடுத்து வருகிறது. இதற்கான அறிவிப்பு இன்னும் ஓரிரு தினங்களில் வெளியிடப்படும் என எதிர்பார்க்கப்படுகிறது.

கடந்த பல மாதங்களாக பி. அண்ட் சி. ஆலை மூடப்பட்டுள்ளது இதனால் 5 ஆயிரத்துக்கும் அதிகமான தொழிலாளர்கள் வேலையின்றி தவித்து வருகிறார்கள்.

தொழிலாளர்களின் நலனில் அக்கறை கொண்டுள்ள புரட்சித் தலைவர் அரசு இந்த ஆலையை திறப்பதில் விடா முயற்சி மேற்கொண்டுள்ளது.

தொழில் துறை அமைச்சர் பொன்னையன், தொழிலாளர் நலத்துறை அமைச்சர் ராகவானந்தம், தொழில் துறை தனிச் செயலாளர் வி. செல்வராஜ், கூடுதல் செயலாளர் எம். பி. பிராணேஷ், தொழிலாளர் நலத்துறை தனிச்செயலாளர் எச் பி என். ஷெட்டி, பொதுப் பணித்துறை தனிச்செயலர் கே. மாதவ சர்மா, பி. அண்ட் சி. ஆலை நிர்வாக் குழு தலைவர் ஹாட்டா, தொழிற் சங்கத் தலைவர்கள் க. சுப்பு, அந்தோணிப் பிள்ளை. சிந்தன் ஆகியோர் கலந்து கொண்ட கூட்டம் தலைமைச் செயலகத்தில் நடைபெற்றது.

இந்த கூட்டத்தில் பி. அண்டு சி ஆலையை திறப்பதற்கான முக்கிய யோசனைகள் தெரிவிக்கப்பட்டன.

பேச்சுவார்த்தையின் போது ஏற்பட்ட ஒருமித்த கருத்துக்கள், தெரிவிக்கப்பட்ட யோசனைகள் ஆகியவற்றை அமைச்சர்கள் பொன்னையனும், ராகவானந்தமும் முதல்வர் புரட்சித்தலைவரிடம் நேரில் சென்று தெரிவித்தனர். பி அண்ட்சி. ஆலையைத் திறக்க உதவிட முன்வந்துள்ள தொழில் மேம்பாட்டு நிதியுதவி வங்கி சில நிபந்தனைகளை விதித்துள்ளது.

இதுகுறித்து அந்த வங்கியுடன் கழக அரசும் பி. அண்ட் சி. ஆலை நிர்வாகமும் தொடர்பு கொண்டு பேசிய பிறகு மீண்டும் முதலவர் புரட்சித் தலைவருடன் கலந்து ஆலோசனை நடத்தப்படும்.

அதன்பின்னர் பி அண்ட் சி. ஆலை திறப்பு குறித்து அறிவிக்கப்படும். இந்த அறிவிப்பு இன்னும் ஓரிரு தினங்களில் வெளியிடப்படும் என்று தெரிகிறது.

# ஒவ்வொரு துறையிலும் புதிய சரித்திரம்படைத்த புரட்சித்தலைவர் அரசு

## அமைச்சர் கோவேந்தன் பெருமிதம்

தஞ்சாவூர், செப். 23- ஒவ்வொரு துறையிலும் புரட்சித் தலைவர் அரசு புதிய சரித்திரம் படைத்து வருகிறது என்று அமைச்சர் கோவேந்தன் குறிப்பிட்டார்.

தஞ்சாவூர் பெண்கள் கிறித்துவ மேல்நிலைப் பள்ளி அரங்கில் மாவட்டத்தலைவர் வி. கன்னையன் தலைமையில் தஞ்சாவூர் மாவட்ட பட்டதாரி ஆசிரியர் கழகத்தின் மாவட்ட மாநாடு நடைபெற்றது. மாவட்ட செயலாளர் தொ.கோவிந்தசாமி வரவேற்று பேசினார் மாவட்ட இணைச் செயலாளர் எம்.பிச்சைக் கண்ணு அறிக்கை படித்தார். அமைப்புச் செயலாளர் தமிழ்மணி தீர்மானங்களைப் படித்தார்.

இம்மாநாட்டில் கலந்து கொண்டு, மாவட்ட முதுநிலைப்பட்டதாரி ஆசிரியர் கழகம் நடத்திய தேர்வில்வெற்றிபெற்றமாணவ மாணவியருக்கு பரிசுகளையும் பள்ளிகளுக்கு சுழற் கேடயங்களையும் வழங்கி பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அமைச்சர் கோவேந்தன் பேசுகையில் கூறியதாவது:-

தமிழக அரசு கல்விக்காக சிறப்பான திட்டங்களை நிறைவேற்றி வருகிறது.

கல்விதுறைக்காகமட்டும் ரூ 402 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இது தவிர ஆதிதிராவிடர் நலத்துக்காக ஒதுக்கப்படும் ரூ 48 கோடி பெருமளவும் தாகை கல்விப் பணிக்காகத்தான் செலவழிக்கப்படுகிறது.

### கல்விப் பணிகள்

அதுபோலவே ரூ 11 கோடி ஒதுக்கீடு பெற்றுள்ள பிற்படுத்தப்பட்டோர் நிதியில் சுமார் ரூ 10 கோடி வரை கல்விப் பணிகளுக்காகவே பயன்படுத்தப்படுகிறது.

பிற்படுத்தப்பட்டோர் நலத்துறைமூலம் நடத்தப்படும் 277 பள்ளிகளில் 60 ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்களும் 523 விடுதிகளில் 30 ஆயிரத்துக்கு மேற்பட்டமாணவர்களும் பயின்று வருகின்றனர்.

தன்னிறைவுத் திட்டத்தில் கூட ரூ. 33 கோடி செலவில் ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட பள்ளிக் கட்டிடங்கள் கட்டப்பட்டன.

இவ்வாறு அண்ணாவின் எண்ணங்களை புரட்சித் தலைவர் நிறைவேற்றி வருகிறார்.

கல்வித் துறையில் மட்டுமில்லாமல் பல்வேறு துறைகளிலும் இந்த அரசு சரித்திர சாதனை படைத்து வருகிறது.

வேலைவாய்ப்புப் பணிகளுக்காக பயிற்சி திட்டத்தையும் இளம் சட்டபட்டதாரிகளுக்கு பயிற்சி வழங்கும் திட்டத்தையும் இந்த ஆண்டு தொடங்கவிருக்கிறோம். நுழைவுத் தேர்வு எழுதுவதற்குகூட ஒரு பயிற்சி கொடுப்பது பற்றி பரிசிலித்துக் கொண்டிருக்கிறோம்.

இப்படி ஒவ்வொரு துறையிலும் புரட்சித் தலைவரின் தலைமையில் இயங்கும் அண்ணாவின் அரசு புதிய சரித்திரத்தை உருவாக்கி வருகிறது.

இவ்வாறு அமைச்சர் எம். ஆர். கோவேந்தன் பேசினார்.

பல்லவன் போக்குவரத்து கழக

## ஊழியர்களுக்கு உடற்பயிற்சி

சென்னை. செப். 23. பல்லவன் போக்குவரத்து கழகத்தைச் சேர்ந்த ஊழியர்களுக்கு உடற்பயிற்சி அளிக்கும் திட்டம் நேற்று சென்னையில் தொடங்கியது.

சோர்வு ஏற்படுவதை தடுக்கவும், வாழ்வில் தன்னம்பிக்கையை வளர்க்கவும் பல்லவன் போக்குவரத்துக் கழக ஊழியர்களுக்கு உடற்பயிற்சியளிக்கும் திட்டம் ஒன்று தொடங்கியது.

சென்னையில் உள்ள 17டெப்போக்களில் இருந்தும் சுமார் 50முதல் 60பேர் தேர்ந்தெடுக்கப்பட்டு யோகாசனம் பளு தூக்குதல், நீச்சல் போன்ற உடற்பயிற்சிகள் அளிக்கப்படும்.

பல்லவன் போக்குவரத்தைச் சேர்ந்த ஊழியர்கள் எதிர் காலத்தில் சிறந்த விளையாட்டு வீரர்களாகமாநில அளவிலும் தேசிய அளவிலும் போட்டிகளில கலந்து கொள்ள இந்த பயிற்சி உதவிகரமாக இருக்கும்.

சைதாபேட்டையில உள்ள ஒய். எம். சி. ஏ. உடற்பயிற்சி கல்லூரி மைதானத்தில் இந்தப் பயிற்சி நடத்தப்படும். நேற்று காலை இந்த பயிற்சி தொடங்கியது.

துவக்கத்தில் சுமார் 6 வாரம் இப்பயிற்சி இருக்கும் இதில் நல்ல பயிற்சி பெற்றவர்கள மற்ற ஊழியர்களுக்கு பயிற்சி அளிப்பார்கள்.

பல்லவன் போக்குவரத்து கழகத் தலைவர் கே. ரவீந்திரன் சென்னையில் நிருபர்களிடையே பேசுகையில் இத் தகவலைக் கூறினார்.

டான்பாஸ்கோ உடற்பயிற்சி நிறுவன நிர்வாக அதிகாரிஏ.ஜே.டிஸோஸா இத்தகைய பயிற்சிகளை அளிப்பார். பயிற்சித் திட்டம் பற்றி உடன் இருந்த டிஸோஸாவும் அப்போது விளக்கினார்.

நுங்கம்பாக்கம் ரெயில்வே நிலையம் அருகே சுரங்கப்பாதை அமைக்கப்பட்டிருப்பதால் நெல்சன் மாணிக்கம் சாலை வழியே அண்ணா நகர் (மேற்கு)க்கு மேலும் சில பஸ்கள் விடுவது பற்றி பரிசிலிக்கப்படும் என்றும் ரவீந்திரன் தெரிவித்தார்.

## நாகை தருமன் மகள் திருமணம்

சென்னை, செப். 23— தாய் துணை ஆசிரியர் நாகை தருமனின் வளர்ப்பு மகள் செல்விக்கும், சொ. வீராசாமியின்மகன் டாக்டர் வீ.செல்வராஜுக்கும் திருமணம் பட்டுக்கோட்டையில் நடைபெற்றது.

சட்டமன்ற மேலவைத் தலைவர் ம. பொ. சி., நிதியமைச்சர் டாக்டர் நாவலர், கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச., மற்றும் அமைச்சர்கள் மற்றும் பத்திரிக்கையாளர்கள் வாழ்த்துச். செய்தி அனுப்பியிருந்தனர்

(8ம் பக்தி தொடர்ச்சி)

வாசன் விஜயதேவ், சுதன்வா. ராமதாஸ், பகவத்சிங், செல்வராஜ். ராஜசேகர் மற்றும் பலர் பேசினார்கள்.

### சேந்தங்குடி

தஞ்சைவட்டம்சேந்தங்குடியில் அண்ணா பவள விழாவையொட்டி ஆர். சிங்காரவேலு கொடி ஏற்றினார்

மந்தாக் குளக்கரையில் ஆர். கோவிந்தராஜ் கொடி ஏற்றினார்.

பள்ளிவாசல் தெருவில் எஸ். கிருஷ்ணமூர்த்தி கொடி ஏற்றினார்

### பெரும்பாக்கம்

வானூர்வட்டம் பெரும்பாக்கம் கிளை கழகத்தின் சார்பில் அண்ணா பவள விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அண்ணாவின் திருவுருவச் சிலைக்கு மாலை அணிவிக்கப்பட்டது.

தி. அண்ணாதுரை. இ. சின்னையன், நடராசன், ஆர். பலராமன் மற்றும் பலர் பேசினர்.

### திமிரி

திமிரி ஒன்றியத்தில் வி.ஏ. சுந்தரம் தலைமையில் வி.எஸ். பழனி முன்னிலையில் பேரறிஞர் அண்ணா பவள விழா சிறப்பாக நடந்தது.

மருத்துவாம் பாடியில் நடைபெற்ற விழாவுக்கு ம.மூர்த்தி தலைமை வகித்தார். கிருஷ்ணன், ராதாகிருஷ்ணன் ஆகியோர் பேசினர்.

மாத்திக்காரன் பட்டியில் ஜி. பரசுராமன் தலைமையில் அண்ணா பவளவிழா நடந்தது. கோதண்டன் சிறப்புரையாற்றினார்.

பரதராமி கிராமத்தில் நடந்த பவள விழாவுக்கு பி. எம். ரேணு தலைமை வகித்தார். பி. கோவிந்தசாமி, சந்திரன், பார்த்தசாரதி மற்றும் பலர் பேசினர்.

### வணக்கம்பாடி

வணக்கம்பாடியில் பேரறிஞர் பெருந்தகை அண்ணாவின் பவளவிழாவை முன்னிட்டு நடந்த பொது கூட்டத்திற்கு ஆர். பிச்சாண்டி தலைமை வகித்தார். ஜி ராசன், சங்கர், வெங்கடேசன், குப்புசாமி, அரங்கநாதன், சம்பந்தன் கிருஷ்ணன், மற்றும் பலர் பேசினர்.

புரட்சித் தலைவர் அரசின் சாதனைகளை விளக்க சைக்கிள் பேரணியும் நடந்தது.

### விளாப்பாக்கம்

விளாப் பாக்கத்தில் நடந்த பவளவிழா நிகழ்ச்சிக்கு கே. ராமமூர்த்தி தலைமை தாங்கினார். பி. தட்சிணாமூர்த்தி வரவேற்று பேசினார். தி. க. செயபாலன் மற்றும் பலர் பேசினர்.

டி. புதூர் கிராமத்தில் ராசமன்னார் தலைமையிலும் மோகனதாஸ் முன்னிலையிலும் பவளவிழாப் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

பச்சையப்பன் கொடிஏற்றி வைத்தார். ஜெயபாலன், மன்னார், சம்பந்தன, ராஜசேகரன் மற்றும் பலர் பேசினர்.

# அண்ணா பவளவிழா நிகழ்ச்சிகள்

மதுரை 11வது வட்டம் எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் பேரறிஞர் அண்ணா பவள விழா கொண்டாடப்பட்டது. ஏ கிருபானந்தம் கொடியேற்றி வைத்தார்வட்டச் செயலாளர் துரைமுருகன் தலைமைதாங்கி குழந்தைகளுக்கு இனிப்பு வழங்கினார் மற்றும் சுப்பிரமணியன், டி. வின்சென்ட், அப்பாவு, எஸ்பி ஆண்டி ஏகாகர்மைதீன் முதலியோர் கலந்து கொண்டனர்.

11 வது வட்டம் எம். ஜி. ஆர். இளைஞர் அணி சார்பிலும், விழா சிறப்பாகக்கொண்டாடப்பட்டது

### வேலூர்

வேலூர் நகர் 10-வது வட்டத்தில் ஏ. எம். விஜய குமார் தலைமையில் அண்ணா பவளவிழா கொண்டாடப்பட்டது. தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தலைவர் ஏ. எம். ரகுநாதன் கொடி ஏற்றி வைத்தார். எம். ஜி. ஆர். இளைஞர் அணி துணைத்தலைவர் ஏ. ராஜேந்திரன், ஜானகிராமன், நடராசன் சந்திரய்யா, ஜெயக்கொடி மற்றும் பலர் பேசினர்.

### பெங்களூர்

பெங்களூர் தீபைந்து நகரில் அண்ணா பவள விழா நிகழ்ச்சி நடந்தது பா. முத்துராசன் வரவேற்று பேசினார் கோவிந்தசாமி தலைமை தாங்கினார். அனைவருக்கும் சர்க்கரை பொங்கல் வழங்கப்பட்டது.

எம். சுந்தர், வி. சீனி

4-ம் பக்கம் பார்க்க

அதிகாரம் எதுவும் இல்லாத

# ஜெயவர்த்தனே சமரச திட்டம் திருப்தியாக இல்லை

## அமிர்தலிங்கம் கருத்து

கொழும்பு, செப். 23. இலங்கைத் தமிழர் பிரச்னையை தீர்க்க இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே வெளியிட்டுள்ள சமரச திட்டத்தில் அதிகாரம் எதுவும் இல்லை என்று அமிர்தலிங்கம் கருத்து தெரிவித்துள்ளார்.

இலங்கைத் தமிழர் பிரச்சினையைத் தீர்க்க இலங்கை அதிபர் 5 அம்ச சமரச திட்டத்தை வெளியிட்டு இருக்கிறார்.

250 பிரதேச மண்டலம் அமைப்பது, 25 மாவட்ட கவுன்சில் அமைப்பது, இலங்கையில் மேல்சபை அமைப்பது, வன்முறை செயல்களை ஒழிப்பது, 90 ஆயிரம் தோட்ட தொழிலாளர்கட்கு குடியுரிமை வழங்குவது என்று ஜெயவர்த்தனே அறிவித்துள்ளார்.

### கூடுதல் அதிகாரம்

இந்த சமரச திட்டம் பற்றி இலங்கை தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் கருத்து தெரிவித்துள்ளார்.

அமிர்தலிங்கம் கூறியதாவது:-

ஜெயவர்த்தனே தெரிவித்து உள்ள திட்டம் குழப்பமாக இருக்கிறது.

இந்த திட்டத்தில் உருப்படியான விஷயம் எதுவும் இல்லை.

தமிழர் பகுதி முழுவதற்கும் பாராளுமன்ற பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டு அதிக அதிகாரம் வழங்கப்பட வேண்டும் என்று கோரி வருகிறோம்.

ஆனால் ஜெயவர்த்தனேயின் சமரசதிட்டத்தில் இது பற்றி எதுவும் குறிப்பிடப்படவில்லை.

ஆகவே இந்த சமரச திட்டம் திருப்தி அளிப்பதாக இல்லை.

30-ம் தேதி நடைபெற இருக்கும் வட்டமேஜை மாநாட்டில் எங்களது எதிர்ப்பு இதற்கு தெரிவிக்கப்படும்.

இவ்வாறு அமிர்தலிங்கம் கூறினார்.

105 வது வட்டத்தில்

# பொதுச் செயலாளர் ப. உ. ச. கொடிஏற்றினார்

சென்னை, செப் 23— சென்னை 105 வது வட்டம் திரு.வி.க. சாலையில் அமரர் சி. வி. அன்புத்தம்பி நினைவுக் கம்பம் கொடியேற்று விழாவும், பேரறிஞர் அண்ணா பவள விழாவும் நடைபெற்றது.

அமைச்சர் கே. ஏ. கே. தலைமையில் கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. கழகக் கொடியை ஏற்றி வைத்தார்.

இந்நிகழ்ச்சியில் அ. கணபதி வரவேற்புரையாற்றினார். பி. சம்பங்கிராவ் முன்னிலை வகித்தார் குமார் நன்றி கூறினார் இ. மதுசூதனன் எம்.எல்.சி. ஏ. சி. சண்முகம் எம். எல், ஏ. அங்கமுத்து எம்.எல்.சி. ஆரோக்கியதாஸ், டி. ஆர். துளசி, சதானந்தம், அரிஹரன் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

மருத்துவமனையில்

# சிகிச்சை பெறும் கழகத் தோழர்களுக்கு கோவேந்தன் ஆறுதல்

திருச்சி, செப். 23. விபத்துக்குள்ளாகி திருச்சி மருத்துவமனையில் சிகிச்சை பெறும் கழகத்தோழர்களை அமைச்சர் கோவேந்தன் சந்தித்து ஆறுதல் கூறினார்.

திருச்சியில் நடைபெற்ற அண்ணா பவளவிழாவுக்கு சிவகாசியில் இருந்து வந்திருந்த கழக தொண்டர்கள் லாரியில் தஞ்சையில் இருந்து திருச்சிக்கு செல்லும் வழியில் விபத்துக்குள்ளானது தெரிந்ததே.

லாரி கவிழ்ந்ததால் அதே இடத்தில 2 பேரும் மருத்துவமனையில் 3 பேரும் உயிரிழந்தனர். காயம் அடைந்த 31 பேர் திருச்சி அரசினர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

தஞ்சையில் இருந்து திருச்சிக்கு வந்து கொண்டிருந்த பிற்படுத்தப் பட்டோர் நலத்துறை அமைச்சர் கோவேந்தன் இது பற்றி செய்தி அறிந்ததும் நேராக மருத்துவ மனை சென்று சிகிச்சை பெற்று வரும் கழகத் தொண்டர்களைப் பார்த்து உடல் நலம் விசாரித்தார் அவர்களுக்கு அமைச்சர் ஆறுதல கூறினார்.

அண்மையில் நடந்த எதிர்க்கட்சிகள் போராட்டத்தின் போது தாக்குதலுக்கு ஆளாகி சிகிச்சை பெற்று வரும் திருச்சி மாவட்ட காவல்துறை அதிகாரியையும் சந்தித்து அமைச்சர் ஆறுதல் கூறினார்.

மன்னார்குடி க்கருகே விபத்துக்குளளாகிதஞ்சை அரசினர் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் கழக தொண்டர்களையும் அவர் சந்தித்து ஆறுதல் கூறினார். அமைச்சருடன் பேராவூரணி மலையப்பன் சுந்தரம் மற்றும் கழக தோழர்கள் சென்றனர்.

# எக்ஸ்பிரஸ் சாலைகள்

புதுடெல்லி, செப். 23 குஜராத்தில் அகமதாபாத்துக்கும் பரோடாவுக்கும் இடையேயும், மேற்கு வங்கத்தில் கல்கத்தாவுக்கும் பால்சிட்டுக்கும் இடையேயும் உலக வங்கி உதவியுடன் ரூ. 400 கோடி செலவில் வாகனங்களிடம் கட்டணம் வசூலித்து அனுமதிக்கும் எக்ஸ்பிரஸ் சாலைகள் அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது.

அகமதாபாத்திற்கும் பரோடாவுக்குமிடையே எக்ஸ்பிரஸ் சாலை அமைப்பதன் மூலம் 14 கிலோ மீட்டர் தூரம் மிச்சமாகும். கல்கத்தா எக்ஸ்பிரஸ் சாலை மூலம் 10 கிலோ மீட்டர் தூரம் குறையும்.

இப்படி தூரம் குறைவதால் கார்களுக்கு 12.50 ரூபாயும லாரி போன்ற வாகனங்களுக்கு 36 ரூபாயும் செலவு குறையும் இதற்கேற்ப அவைகளுக்கு கட்டணம் வசூல்க்கலாம் அப்படி வசூலிப்பதன் மூலம் சாலையை அமைக்க செலவிடும் தொகை 20 வருடத்தில் அரசுக்கு திரும்ப கிடைத்து விடும்.

குரோம்பேட்டையில்

# இளைஞர் அணி அலுவலக திறப்பு விழா

செங்கல்பட்டு, செப். 23- குரோம்பேட்டை 24 வது வட்டத்தில் எம்.ஜி.ஆர். இளைஞர் அணி மன்ற திறப்பு விழா நடைபெற்றது.

செங்கைமாவட்ட எம்.ஜி.ஆர். இளைஞர் அணி துணைச் செயலாளர் அடைக்கலம் தலைமையிலும், மாவட்ட எம்.ஜி.ஆர் மன்ற பெருளாளர் பச்சையப்பன் முன்னிலையிலும் நடைபெற்ற இந்நிகழ்ச்சியில் அப்துல்ரசாக் எம்.எல்.ஏ. பங்கேற்று அலுவலகத்தை திறந்து வைக்க சதானந்தம் நன்றி கூறினார். நெல்லை கௌரியும் நிகழ்ச்சியில் பங்கேற்றார்.



எல்லா நகரங்களுக்கும்

# மலிவு விலையில் பால் தரும் திட்டம்

## அமைச்சர் கே. ஏ. கே. தகவல்

சென்னை, செப். 23 ஐம்பதாயிரத்துக்கு மேல் மக்கள் வாழும் எல்லா நகரங்களுக்கும் சென்னையைப்போல் மலிவான விலையில் பால்சப்ளை செய்ய திட்டமிடப்பட்டுள்ளது என்று அமைச்சர் கே. ஏ. கே. அறிவித்தார்.

விவசாயிகள் உற்பத்தி செய்கிற பாலுக்கு கட்டுப்படி ஆகிறவிலை கிடைக்க வேண்டும் அதே சமயம் வாங்கி உண்போருக்கு அதிக விலை இன்றி தாராளமாக பால் கிடைக்க வேண்டும்என்ற நோக்கில் தமிழக அரசின் பால் வளத்துறை தீவிர திட்டங்களை நிறைவேற்றி செயல்படுத்தி வருகிறது.

பால் உற்பத்தியைப் பெருக்கவும் பொது மக்களுக்கு அதிக பால்கிடைக்கச் செய்யவும் மேலும் பல திட்டங்களை நிறைவேற்றுவது குறித்து மாவட்ட கூட்டுறவு பால் வள ஒன்றியத் தலைவர்களுடன் மாதவரம் பால் பண்ணை அலுவலகத்தில் அமைச்சர் கே.ஏ.கே. ஆலோசனை நடத்தினார் உயர் அதிகாரிகளும் ஆலோசனைக் கூட்டத்தில்கலந்துகொண்டனர்.

அதன் பிறகு அமைச்சர் கே. ஏ. கே. நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:-

பால் பெருக்கு, பால் கொள்முதல் அதிகரிப்பு, வினியோக விஸ்தரிப்பு ஆகிய பணிகள் குறித்து ஆலோசனை நடத்தினோம்.

சென்னை நகர மக்களுக்கு 1983ல் தினசரி 3.63 லட்சம் லிட்டர் பால் வினியோகிக்கப் பட்டது.

### அளவு உயரும்

தற்போது 4.11 லட்சம் லிட்டராக அது உயர்த்தப்பட்டுள்ளது. சுமார் 80 ஆயிரம் லிட்டர் பால் 26 தானியங்கி நிலையங்கள் மூலம் வழங்கப்பட்டுள்ளது.

தற்போதுள்ள அளவை 8 லட்சம் லிட்டராக உயர்த்த திட்டமிடப்பட்டுள்ளது.

அம்பத்தூரில் உள்ள பால் பதன நிலையத்தின் கொள்திறனை 2 லட்சம் லிட்டரிலருந்து 4 லட்சம் லிட்டராகவும், மாதவரம் நிலையத்தில் 1.25 லட்சம் லிட்டரிலிருந்து 1,75 லிட்டராகவும் உயர்த்தப்படும்.

ரூ. 5.6. கோடி செலவில் 3வது பால் பண்ணை ஒன்றை தென் சென்னையில் அமைக்க ஏற்பாடு செய்து வருகிறோம்.

இது நாளொன்றுக்கு 2 லட்சம் லிட்டர் கொள்திறன் உள்ளதாக இருக்கும்.

### விலை உயராது

சென்னையைத் தவிர தமிழ்நாட்டில் உள்ள மற்ற பெரிய, சிறிய நகரங்களில் தற்போது தினசரி 2.4 லட்சம் லிட்டர் பால் வழங்கப்படுகிறது

50 ஆயிரத்துக்குமேல்மக்கள் தொகை உள்ள 37 நகரங்களில் இதுவரை 20 நகரங்களில் பால் வழங்கப்படுகிறது மற்ற 17 நகரங்களில் வரும் மார்ச் மாதத்துக்குள் சென்னையைப் போல் மலிவான விலையில் பால் வழங்கப்படும்.

பால் விலையை உயர்த்தும் எண்ணம் தற்போதைக்கு அரசிடம இல்லை.

கூட்டுறவு ஒன்றியங்கள் கொள்முதல் செய்யும் பாலைப் பதப்படுத்த திருநெல்வேலி மாவட்டம் பாளையங் கோட்டையில் ரூ. 9.62 கோடியில் ஆலை அமைக்கப்படும் இது தினசரி 50 ஆயிரம் லிட்டர் பதப் படுத்தும்.

காரைக்குடியில் தினசரி 50 ஆயிரம் லிட்டர் பதப் படுத்தவும்கோயமுத்தூரில் தினசரி 1 லட்சம் லிட்டர் பால் பதப்படுத்தவும், உதகையில் 50 ஆயிரம் லிட்டர் பதப் படுத்தவும் ஆலைகள் அமைக்கப் படும் உதகையில் 20 ஆயிரம் லிட்டர் பாலாடைக் கட்டி உற்பத்தியும் செய்யப்படும்.

தேசிய பால் வளர்ச்சி கவுன்சில்அதிகாரிகள் தமிழகத்திற்கு வந்து ஒன்பது மாவட்டங்களில் பால் பெருக்கு மற்றும் விநியோகப் பணிகளைப் பார்த்து மகிழ்ச்சி தெரிவித்தனர்.

பால்வளர்ச்சித் திட்டத்தில் மேலும் 8 மாவட்டங்களைச் சேர்க்க ரூ. 12 கோடி ஒதுக்க ஒத்துக் கொண்டனர்.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. அறிவித்தார்.

பால் வளத்துறை நிர்வாகஇயக்குனர் வ.சங்கர சுப்பையன் நிருபர்களிடம் கூறுகையில்பால்விற்பனை நிலையங்களில் கலப்படத்தை தடுக்க தனி கண்காணிப்பு பிரிவு அமைக்கப்பட்டுள்ளது. 10 இடங்களில் பாலில்கலப்படத்தை கண்டு பிடித்து நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

பால் விற்பனை நிலையங்களை நவீனப்படுத்தவும் திட்டமிடப் பட்டுள்ளது என்று குறிப்பிட்டுள்ளார்.

# சிவகங்கையில் கழகக் கூட்டம்

30-9-84 ஞாயிறு மாலை 6 மணிக்கு 17வது வட்டம் பெரிய கடை வீதியில் காஜா முகைதீன் தலைமையில பேசுவோர்.

ஆர். மதிவாணன், பெ. தியாகராஜன், நாகேஸ்வரன், ஆர். குருசாமி, எஸ். அன்பழகன், முனியப்பன், முனியாண்டி, கண்ணப்பன் ஜெயராமன், ராஜ்குமார், அப்துல்சலாம், பொன்னுசாமி மற்றும் பலர்.

# பெண் தாலி பறிப்பு: வாலிபர் கைது

சென்னை, செப். 23— சாஸ்திரிநகரைச் சேர்ந்தவன் செல்வராஜ்வயது29 பாண்டி பஜாரில் கண்ணம்மா என்பவருடைய கழுத்திலிருந்து 5 பவுன் தங்கத்தாலியை அறுத்துக் கொண்டு ஓடினானாம்.

அவனை கண்ணம்மாவின் கணவர் கோபால் துரத்திச் சென்றபோது அவரை இரும்புத் தடியால் செல்வராஜ் தாக்கினானாம்.

இது குறித்து பாண்டி பஜார் போலீசில்கோபால் புகார் செய்தார்.

உதவிக் கமிஷனர் ராஜன் உத்தரவின் பேரில் இன்ஸ்பெக்டர் ஜகந்நாதன் செல்வராஜைகைது செய்தார். அவனிடம் இருந்து 25 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள நகைகள் மீட்கப்பட்டன.

இரவு நேரத்தில்

# வீடு புகுந்து திருடியவாலிபன் பிடிபட்டான்

சென்னை, செப். 23— சென்னை புது வண்ணாரப்பேட்டையை சேர்ந்தவன் மரியதாஸ் (வயது25)

இவன் பாண்டி பஜாரில் இரவு நேரத்தில் வீடு புகுந்து திருடியதாக பிடிபட்டான். அவனிடமிருந்து 25 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் கைப்பற்றப்பட்டன. அவன் ஒருவருடம் தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் காவலில் வைக்கப்பட்டான்.

பாண்டிபஜார் போலீசார் அவன் மீது வழக்கு பதிவு செய்து சைதாப்பேட்டை 17வது மெட்ரோபாலிடன் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஆஜர்படுத்தினர்.

மரியதாசுக்கு 2 வருடம் கடுங்காவல் தண்டனை விதித்து மாஜிஸ்திரேட் தீர்ப்பளித்தார்.



Edited and Published by K. RAVINDRA on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras—600 029.